இத்தகைய சேவையினால் நான் அடைந்த நன்மை அளவிட முடியாதது.

சில தினங்களுக்குள், காங்கிரஸின் நடைமுறையைப் பற்றியெல்லாம் தெரிந்து கொண்டுவிட்டேன். தலைவர்களில் பெரும்பாலோரைச் சந்தித்தேன்.

என் தீர்மானத்தை அனுமதிப்பதாக ஸர் பிரோஸ்ஷா ஒப்புக் கொண்டிருந்தார். ஆனால், விஷயாலோசனைக் கமிட்டி முன்பு அதை யார், எப்பொழுது கொண்டு வருவார்கள் என்று திகைத்துக் கொண்டிருந்தேன். ஏனெனில், ஒவ்வொரு தீர்மானத்தின் பேரிலும், நீண்ட சொற்பொழிவுகள் நடந்தன. எல்லாம் முழுக்க முழுக்க ஆங்கிலத்தில்தான் ஒவ்வொரு தீர்மானத்தையும் யாராவது ஒரு பிரபலமான தலைவர் ஆதரித்து வந்தார். முக்கியஸ்தர்களின் பேரிகை முழக்கத்தின் நடுவே என் குரல் ஈனக்குரலாக இருந்தது. இரவும் நெருங்கவே என் நெஞ்சு படபடத்துக் கொண்டிருந்தது.

வெளியே போவதற்கு ஒவ்வொருவரும் அவசரப்பட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது இரவு 11 மணி. எழுந்து பேச எனக்குத் துணிவு இல்லை. முன்னாலேயே கோகலேயைப் பார்த்தேன். என் தீர்மானத்தை அவர் பார்த்தும் இருக்கிறார். அவர் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகே போய், ''தயவு செய்து எனக்கு ஏதாவது செய்யுங்கள்'' என்று குசுகுசுவென்று சொன்னேன்.

''ஆகவே, எல்லாவற்றையும் முடித்துவிட்டோம் அல்லவா?'' என்றார், ஸர் பிரோஸ்ஷா மேத்தா.

''இல்லை. இல்லை. தென்னாப்பிரிக்கா பற்றிய தீர்மானம் பாக்கியாக இருக்கிறது. ஸ்ரீ காந்தி நீண்ட நேரமாக காத்து கொண்டிருக்கிறார்'' என்று உரக்கக் கூறினார், கோகலே.

''நீங்கள் தீர்மானத்தை பார்த்தீர்களா?'' என்று கேட்டார், ஸர் பிரோஸ்ஷா.

''பார்த்தேன்.''

''அது உங்களுக்கு பிடித்திருக்கிறதா?''

''மிக நன்றாகவே இருக்கிறது.''

''அப்படியானால், அதை எடுத்துக் கொள்ளுவோம். காந்தி, அதைப் படியும்.''

நான் நடுங்கிக் கொண்டே அதைப் படித்தேன். கோகலே அதை ஆமோதித்தார். ''ஏகமனதாக நிறைவேறியது'' என்று எல்லோரும் கூவினார்கள்.

''காந்தி, இத் தீர்மானத்தின் மீது நீர் ஐந்து நிமிட நேரம் பேசலாம்'' என்றார், ஸ்ரீ வாச்சா.

இந்த நடைமுறை எனக்கு கொஞ்சமும் திருப்தியளிக்கவே இல்லை. தீர்மானத்தைப் புரிந்து கொள்ள யாருமே கவலைப்படவில்லை. ஒவ்வொருவரும் போவதற்கு அவசரப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இத்தீர்மானத்தைக் கோகலே பார்த்துவிட்டார் என்பதனால் மற்றவர்கள் அதைப் பார்க்க வேண்டியதோ, புரிந்து கொள்ள வேண்டியதோ அவசியம் என்று எண்ணவில்லை. என்றாலும் காங்கிரஸில் அது நிறைவேறியது என்பது மாத்திரமே என் மனதிற்கு மகிழ்ச்சியை அளிக்கப் போதுமானதாக இருந்தது. காங்கிரஸ், முத்திரை வைத்து விட்டதென்றால், அதை நாடு முழுவதும் அங்கீகரித்து விட்டது என்று ஆகுமாகையால் எவருக்கும் மகிழ்ச்சியளிக்க அதுவே போதும்.

## 31. பம்பாயில்

நான் பம்பாயில் குடியேறி, வக்கீல் தொழிலை நடத்திக் கொண்டு, பொது வேலையில் தமக்கு உதவியாக இருக்க வேண்டும் என்று கோகலே அதிக ஆவலுடன் இருந்தார்.

வக்கீல் தொழிலில் நான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே எனக்கு வருமானம் கிடைத்து வந்தது. எனது தென்னாப்பிரிக்கா கட்சிக்காரர்கள், அவ்வப்போது எனக்கு ஏதாவது வேலை கொடுத்து கொண்டிருந்தார்கள். கிடைத்த வருமானம், என் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போவதற்கு போதுமானதாக இருந்தது.

நான் எண்ணியவாறு நான் பம்பாயில் நிலைத்துவிட்டதாக தோன்றிய சமயத்தில் எதிர்பாராதவிதமாக தென்னாப்பிரிக்காவிலிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. ''சேம்பர் லேன் இங்கே எதிர்பார்க்கப்படுகிறார். தயவு செய்து உடனே திரும்பி வாருங்கள்'' என்பதே அந்தத் தந்தி. நான் வாக்களித்திருந்தது நினைவுக்கு வந்தது. பிரயாணத்திற்கு எனக்குப் பணம் அனுப்பியதுமே நான் புறப்படத் தயாராக இருப்பதாகப் பதில் தந்தி கொடுத்தேன். அவர்களும் உடனே பணம் அனுப்பிவிட்டார்கள். என் அலுவலகத்தைக் கைவிட்டுத் தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்பட்டேன்.

## 32. திரும்பவும் தென்னாப்பிரிக்காவில்

சரியான தருணத்தில் நான் டர்பன் போய்ச் சேர்ந்தேன். அங்கே வேலை எனக்காக காத்துக் கொண்டிருந்தது. சேம்பர்லேனிடம் தூது செல்வதற்குத் தேதியும் நிச்சயிக்கப்பட்டிருந்தது. அவரிடம் சமர்ப்பிப்பதற்கு மகஜரைத் தயாரிப்பதோடு நானும் தூது கோஷ்டியுடன் சென்று அவரைப் பார்க்க வேண்டும்.

ஸ்ரீ சேம்பர்லேன் இந்தியரின் தூதுகோஷ்டிக்கு திருப்திகரமான பதில் கூறவில்லை. ''சுயாட்சி பெற்றுள்ள குடியேற்ற நாடுகள் மீது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அதிகாரம் எதுவும் இல்லை என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் குறைகள் நியாயமானவை என்றே தோன்றுகிறது. என்னால் முடிந்ததைச் செய்கிறேன். ஆனால், ஐரோப்பியரின் மத்தியிலிருந்து வாழ விரும்பினால், அவர்கள் உன்னிடம் பிரியங் கொள்ளும்படி செய்ய நீங்கள் முயல வேண்டும்'' என்று அவர் கூறினார்.

இந்தப் பதில், தூது சென்ற இந்தியரின் உற்சாகத்தைக் குலைத்துவிட்டது. நானும் ஏமாற்றமடைந்தேன். எங்கள் எல்லோருக்குமே இது கண்களைத் திறந்து விடுவதாக இருந்தது. இனித் தீவிரமாக வேலையை ஆரம்பித்து விட வேண்டியதே என்று கண்டேன். என் சகாக்களுக்கு நிலைமையை விளக்கிக் கூறினேன்.

நான் மேலும் கூறியதாவது: ''உண்மையைச் சொன்னால், நீங்கள் எந்த வேலைக்காக என்னை அழைத்திருந்தீர்களோ அந்த வேலை இப்பொழுது முடிந்து விட்டது. நான் தாய்நாடு திரும்புவதற்கு என்னை நீங்கள் அனுமதிப்பது சாத்தியமே என்று இருந்தாலும் நான் டிரான்ஸ்வாலை விட்டுப் போகக் கூடாது என்று எண்ணுகிறேன். முன் போல நேட்டாலில் இருந்து கொண்டு என் வேலையைச் செய்து கொண்டிருப்பதற்குப் பதிலாக, இங்கிருந்து கொண்டே நான் அதைச் செய்து வர வேண்டும். ஓர் ஆண்டுக்குள் இந்தியாவுக்குத் திரும்புவது என்று நான் இனியும் எண்ணிக் கொண்டிருப்பதற்கில்லை. டிரான்ஸ்வால் சுப்ரீம் கோர்ட்டில் வக்கீலாக நான் பதிவுசெய்து கொள்ள வேண்டியதே. இப்புதிய இலாகாவைச் சமாளித்துக் கொண்டுவிட முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது. இதை நாம் செய்யவில்லையென்றால், சமூகம் அடியோடு கொள்ளையடிக்கப்பட்டு விடுவ

தோடு இந்நாட்டிலிருந்து விரட்டியடிக்கப்பட்டுவிடும்.''

எனவே, நான் வேலையைச் செய்து கொண்டு போக ஆரம்பித்தேன். பிரிட்டோரியா விலும் ஜோகன்னஸ்பர்க்கிலும் இருக்கும் இந்தியருடன் விஷயங்களை விவாதித்தேன். முடிவாக ஜோகன்னஸ்பர்க்கில் எனது அலுவலகத்தை அமைப்பது என்று தீர்மானித்தேன்.

## 33. கீதை

கீதையினிடம் இதற்கு முன்பே எனக்குப் பக்தி இருந்தது; அது என் உள்ளத்தைக் கவர்ந்தும் இருந்தது. அதை ஆழ்ந்து படிக்க வேண்டியதன் அவசியத்தை இப்பொழுது உணர்ந்தேன். என்னிடம் கீதையின் இரண்டொரு மொழி பெயர்ப்புக்கள் இருந்தன. அவற்றைக் கொண்டு சமஸ்கிருத மூல நூலைப் புரிந்துகொள்ள முயன்றேன். தினம் இரண்டொரு சுலோகத்தை மனப்பாடம் செய்துவிடுவது என்றும் தீர்மானித்தேன். எனது காலைக் கடன்களைச் செய்யும் நேரத்தை இதற்குப் பயன்படுத்திக் கொண்டேன். இவ்வேலைகளை முடிப்பதற்கு எனக்கு முப்பத்தைந்து நிமிடங்களாகும். பல் துலக்குவதற்குப் பதினைந்து நிமிடங்கள்; குளிக்க இருபது நிமிடங்கள்; மேனாட்டு வழக்கத்தை அனுசரித்து, நின்று கொண்டே பல் துலக்குவேன். அப்போது எதிரேயுள்ள சுவரில் கீதையின் சுலோகங்களை எழுதிய காகிதத்தை ஒட்டி விடுவேன். நினைவுபடுத்திக் கொள்ள அவ்வப்போது அதைப் பார்த்துக் கொள்வேன். அன்றாடம் மனப்பாடம் செய்து கொள்ளுவதற்கும், முன்னால் மனப்பாடம் செய்திருந்த சுலோகங்களை நினைவுபடுத்திக் கொள்ளுவதற்கும் எனக்கு அந்த நேரம் போதுமானதாக இருந்தது. இவ்வாறு பதின்மூன்று அத்தியாயங்களை மனப்பாடம் செய்து விட்டதாக எனக்கு ஞாபகம். என்னைப் பொறுத்தவரையில், எனக்கு வழி காட்டும் தவறாத் துணையாகக் கீதை ஆகிவிட்டது.

அபரிக்கிரகம் (உடைமை வைத்துக் கொள்ளாமை) சமபாவம் (சமத்துவம்)போன்ற சொற்கள் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அந்த சமபாவத்தை எப்படி வளர்ப்பது, எப்படிப் பாதுகாப்பது என்பதே பிரச்சினை.

எனக்கு இருப்பவற்றையெல்லாம் விட்டு விட்டுக் கடவுளைப் பின்பற்ற வேண்டுமா? இதற்கெல்லாம் உடனே நேரான பதில் கிடைத்தது. 'என்னிடம் இருப்பவைகளை எல்லாம் நான் துறந்துவிட்டாலன்றிக் கடவுள் நெறியை நான் பின்பற்ற முடியாது' என்பதே அந்தப் பதில். உடனே நான் ரேவாசங்கர்பாய்க்கு எழுதி, இன்ஷூரன்ஸுக்கு மேற்கொண்டு பணம் கட்ட வேண்டாம் என்று அறிவித்தேன். இதுவரை கட்டிய பணத்தில் கிடைக்க கூடியதைப் பெறப் பார்க்கும்படியும், இல்லாவிட்டால் அத்தொகையைப் போனதாகவே வைத்துக் கொள்ளும்படியும் எழுதினேன். எனக்குத் தந்தையை போல் இருந்து வந்தவரான என் சகோதரருக்கும் கடிதம் எழுதினேன். அதுவரையில் நான் மிச்சமாக வைக்க முடிந்ததையெல்லாம் நான் அவருக்கே கொடுத்து விட்டதாகவும், இனி என்னிடமிருந்து அவர் வேறு எதுவும் எதிர்பார்ப்பதற்கு இல்லை என்றும், மேற்கொண்டும் ஏதாவது மீதமிருக்குமானால் அதை இந்திய சமூகத்தின் நன்மைக்காகவே செலவிட வேண்டியிருக்கிறது என்றும் அவருக்கு விளக்கினேன்.

## 34. ஒரு நூலின் மந்திர சக்தி

ஸ்ரீ போலக் என் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானவர் ஆகிவிட்டார். என்னை வழியனுப்ப ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். பிரயாணத்தின்போது படிக்க எனக்கு ஒரு புத்தகம் கொடுத்துவிட்டுப் போனார். அது எனக்குப் பிடித்தமான புத்தகமாக இருக்கும்

என்றும் சொன்னார். ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூலே அது.

இந்த நூலைப் படிக்க ஆரம்பித்தபின் நடுவில் கீழே வைக்கவே முடியவில்லை. அது என் உள்ளம் முழுவதையும் கவர்ந்து கொண்டு விட்டது. ஜோகன்ன ஸ்பர்க்கிற்கும் டர்பனுக்கும் இருபத்தி நான்கு மணி நேரப் பிரயாணம். ரெயில் அங்கே மாலையில் போய்ச் சேர்ந்தது. அன்றிரவு என்னால் தூங்கவே முடியவில்லை. அந்நூலில் கண்ட இலட்சியங்களுக்கு ஏற்ற வகையில் என் வாழ்க்கையை மாற்றிக் கொண்டு விடுவது என்று தீர்மானித்தேன்.

ரஸ்கினுடைய இம் மகத்தான நூலில் என் உள்ளத்தில் உறுதிப்பட்டிருந்த கொள்கைகள் பிரதிபலித்திருப்பதை நான் கண்டு கொண்டதாகவே நினைக்கிறேன். அதனால் தான் அது என்னை ஆட்கொண்டதோடு என் வாழ்க்கையையும் மாற்றிக் கொள்ளும்படி செய்தது.

'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூல் பின்வருபவைகளைப் போதிக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது.

1. எல்லோருடைய நலனில்தான் தனிப்பட்டவரின் நலனும் அடங்கியிருக்கிறது.

2. தங்கள் உழைப்பினால் வாழ்வைத் தேடிக் கொள்ளுவதற்கு எல்லோருக்குமே ஒரே மாதிரியான உரிமை இருப்பதால், க்ஷவரத் தொழிலாளியின் வேலைக்கு இருக்கும் அதே மதிப்புத்தான் வக்கீலின் வேலைக்கும் உண்டு.

3. ஒரு பாட்டாளியின் வாழ்க்கையும், அதாவது நிலத்தில் உழுது பாடுபடும் குடியானவரின் வாழ்க்கையும், கைத்தொழில் செய்பவரின் வாழ்க்கையுமே வாழ்வதற்கு உகந்த மேன்மையான வாழ்க்கைகள்.

இவைகளில் முதலில் கூறப்பட்டதை நான் அறிவேன். இரண்டாவதாகக் கூறப்பட்டிருந்ததை அரைகுறையாகவே அறிந்து கொண்டிருந்தேன். மூன்றாவதாகக் கூறப்பட்டதோ, என் புத்தியில் தோன்றவே இல்லை. இரண்டாவது, மூன்றாவதும், முதலாவதாகக் கூறப்பட்டிருப்பதிலேயே அடங்கியிருக்கின்றன என்பதைக் 'கடையனுக்கும் கதிமோட்சம்' பட்டப்பகல் போல் எனக்கு வெட்ட வெளிச்சமாகி விடும்படி செய்தது. பொழுது புலர்ந்ததும் நான் எழுந்து இந்தக் கொள்கையை நடைமுறையில் கொண்டு வரத் தயாரானேன்.

## 35, போனிக்ஸ் குடியிருப்பு

எல்லாவற்றையும் குறித்து ஸ்ரீ வெஸ்ட்டுடன் பேசினேன். 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூல் என் உள்ளத்தில் உண்டாக்கியிருக்கும் மாறுதலை அவருக்கு விவரித்துச் சொன்னேன். 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிக்கையை ஒரு பண்ணைக்கு மாற்றிவிட வேண்டும்; அப்பண்ணையில் ஒவ்வொருவரும் உழைக்க வேண்டும்; வாழ்க்கைக்கு வேண்டிய ஒரே மாதிரியான ஊதியத்தை எல்லோரும் பெற வேண்டும். ஓய்வு நேரங்களில் அச்சக வேலையைக் கவனிக்க வேண்டும் என்று ஒரு யோசனையை! அவரிடம் கூறினேன். இந்த யோசனையை ஸ்ரீ வெஸ்ட் அங்கீகரித்தார். எந்த நிறத்தினராக இருந்தாலும், எந்த நாட்டினராக இருந்தாலும், ஒவ்வொருவருக்கும் மாத ஊதியம் மூன்று பவுன் தான் என்றும் நிர்ணயிக்கப்பட்டது.

இவ்விதம் போனிக்ஸ் குடியிருப்பு 1904-ல் ஆரம்பமாயிற்று. எவ்வளவோ கஷ்டங்களெல்லாம் ஏற்பட்ட போதிலும் 'இந்தியன் ஒப்பீனியன்' அங்கிருந்தே பிரசுரிக்கப்பட்டு

வந்தது.

வருங்காலத்தில் இந்தியாவுக்குத் திரும்புவது என்ற நம்பிக்கையையெல்லாம் இப்பொழுது அடியோடு கைவிட்டுவிட்டேன். ஓர் ஆண்டில் திரும்பி வந்துவிடுவேன் என்று என் மனைவிக்கு வாக்களித்திருந்தேன். நான் திரும்புவதற்கான ஏது எதுவுமில்லாமலேயே அந்த ஓராண்டும் முடிந்துவிட்டது. ஆகையால், அவளையும் குழந்தைகளையும் வரவழைத்துக் கொள்வது என்று தீர்மானித்தேன்.

## 36. ஜூலுக் கலகம்

ஜோகன்னஸ்பர்க்கில் நான் நிலை பெற்றுவிட்டேன் என்று நினைத்த பிறகும் எனக்கு நிலையான வாழ்க்கை ஏற்படவில்லை. இனிமேல் கொஞ்சம் அமைதியாக இருக்க முடியும் என்று நான் எண்ணிய சமயம், எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. நேட்டாலில் 'ஜூலுக் கலகம்' ஆரம்பமாயிற்று என்று பத்திரிக்கைகளில் செய்தியைப் படித்தேன். ஜூலுக்களிடம் எனக்கு எந்திவிதமான விரோதமும் இல்லை. அவர்கள் இந்தியருக்குத் தீமை செய்துவிடவும் இல்லை. 'கலகம்' என்று சொல்லப்பட்டதைக் குறித்து எனக்குச் சந்தேகம் இருந்தது. ஆனால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் உலகத்தின் நன்மைக்காகவே இருக்கிறது என்று நான் அப்பொழுது நம்பினேன்.

நேட்டாலுடன் நான் நெருங்கிய தொடர்பு கொண்டவன். ஆகையால், என்னை அதன் பிரஜையாகவே கருதினேன். எனவே, அவசியமானால் இந்திய வைத்தியப்படை ஒன்றை அமைக்க நான் தயாராக இருக்கிறேன் என்று அறிவித்துக் கவர்னருக்கு எழுதினேன். என் யோசனையை ஏற்றுக்கொண்டு அவர் உடனே பதில் எழுதினார்.

டர்பனுக்குச் சென்று, ஆள் தேவை என்று கோரிக்கை வெளியிட்டேன்.

எனக்கு ஓர் அந்தஸ்தை அளிப்பதற்காகவும், வேலை எளிதாக நடப்பதற்காகவும், அப்பொழுது இருந்த சம்பிரதாயத்தை அனுசரித்தும், பிரதம வைத்திய அதிகாரி என்னைத் தற்காலிக சார்ஜன்டு மேஜராக நியமித்தார். நான் தேர்ந்தெடுத்த மூவரை சார்ஜென்டுகளாகவும் கார்ப்பொரலாகவும் நியமித்தார். அவ்வேலைகளுக்குரிய ஆடைகளையும் அரசாங்கத்தினர் எங்களுக்கு அளித்தனர். எங்கள் படை ஆறு வாரம் சேவை செய்தது. எங்களுடைய முக்கியமான வேலை, காயமடைந்த ஜூலுக்களுக்குப் பணிவிடை செய்வதே என்று தலைமைக் காரியாலயத்திற்குப் போனதும் நான் அறிந்து ஆனந்தமடைந்தேன். அங்கிருந்த வைத்திய அதிகாரி எங்களை வரவேற்றார். காயமடைந்த ஜூலுக்களுக்கு வெள்ளைக்காரர்கள் மனமாரப் பணிவிடைகள் செய்வதில்லை என்றும் அவர்கள் புண்கள் அழுகிக் கொண்டு வருகின்றனவென்றும் என்ன செய்வதென்று தெரியாமல் தாம் திகைத்துக் கொண்டிருந்ததாகவும் அந்த அதிகாரி கூறினார். நாங்கள் வந்தது, ஒரு பாவமும் அறியாத ஜூலுக்களுக்குத் தெய்வ சகாயம் போல் ஆயிற்று என்று அவர் ஆனந்தம் அடைந்தார்.

## 37. கஸ்தூரிபாயின் தீரம்

என் மனைவி முதல் முறை கடுமையாக நோயுற்றாள். ரண சிகிச்சை செய்வது அவசியம் என்று ஒரு வைத்திய நண்பர் ஆலோசனை கூறினார். என் மனைவி முதலில் கொஞ்சம் தயங்கினாளெனினும் பிறகு சம்மதித்தாள். அவள் அதிகப் பலவீனமாக இருந்ததால் மயக்க மருந்துக் கொடுக்காமல் டாக்டர் ரண சிகிச்சை செய்ய வேண்டி இருந்தது.

சிகிச்சை வெற்றிகரமானதாயிற்று. ஆனால், அவள் அதிக நோவை அனுபவிக்க நேர்ந்தது. நானே அதிசயிக்கத்தக்க தீரத்துடன் அதை அவள் சகித்துக் கொண்டாள். டாக்டரும், அவருக்குத் தாதியாக இருந்து பணிவிடை செய்த அவருடைய மனைவியும் அதிகக் கவனத்துடன் அவளைப் பார்த்துக் கொண்டார்கள். இது டர்பனில் நடந்தது. பிறகு நான் ஜோகன்னஸ்பர்க் போக டாக்டர் அனுமதித்தார். 'அவளைக் குறித்துக் கவலைப்பட வேண்டாம்' என்றும் சொன்னார்.

ஆனால், அவளுடைய உடல்நிலை அதிக மோசமாகிவிட்டது என்று சில தினங்களில் எனக்குக் கடிதம் வந்தது. படுக்கையில் உட்காருவதற்குக் கூட அவளுக்குப் பலமில்லை என்றும், ஒரு சமயம் பிரக்ஞையில்லாமல் இருந்தாள் என்றும் அறிந்தேன் என்னுடைய சம்மதமில்லாமல் அவளுக்கு மதுவாவது, மாமிசமாவது கொடுக்கக் கூடாது என்பது டாக்டருக்குத் தெரியும். எனவே, ஜோகன்னஸ்பர்க்கில் இருக்கும் என்னுடன் டெலிபோனில் பேசி, அவளுக்கு மாட்டு மாமிச சூப் கொடுக்க அவர் அனுமதி கேட்டார். அதற்கு நான் அனுமதிக் கொடுக்க முடியாது என்று அவருக்குப் பதில் சொல்லிவிட்டேன். ஆயினும், அது விஷயமாக அபிப்பிராயம் கூறக்கூடிய நிலையில் அவள் இருந்தால், அவளைக் கலந்து ஆலோசிக்கலாம் என்றும், அவள் இஷ்டம்போல் செய்து கொள்ளலாம் என்றும் சொன்னேன். ஆனால், டாக்டரோ, "இவ்விஷயத்தில் நோயாளியின் விருப்பத்தைக் கேட்க நான் மறுக்கிறேன். நீங்கள் தான் இதில் அபிப்பிராயம் கூறவேண்டும். நான் கொடுக்க விரும்பும் ஆகாரத்தைக் கொடுக்கும் சுதந்திரத்தை எனக்கு அளிக்க நீங்கள் மறுப்பதானால், உங்கள் மனைவியின் உயிருக்கு நான் பொறுப்பாளியாக மாட்டேன்" என்றார்.

அன்றே ரெயிலில் டர்பனுக்குப் புறப்பட்டேன். அங்கே போனதும் டாக்டரைச் சந்தித்தேன். அவர் நிதானத்துடன் சமாசாரத்தை என்னிடம் கூறினார். "தங்களுடன் டெலிபோனில் பேசுவதற்கு முன்னாலேயே ஸ்ரீமதி காந்திக்கு மாட்டு மாமிச சூப் கொடுத்து விட்டேன் " என்றார்.

"டாக்டர், நீங்கள் செய்தது பெரும் மோசம்" என்றேன்.

"ஒரு நோயாளிக்கு மருந்தோ, ஆகாரமோ இன்னது கொடுப்பதென முடிவு செய்வதில் மோசம் என்பதற்கே இடமில்லை. நோயுற்றிருப்போரையோ, அவர்கள் உறவினரையோ இவ்விதம் ஏமாற்றி விடுவதன் மூலம் நோயாளியின் உயிரைக் காப்பாற்ற முடிவதாயின் டாக்டர்களாகிய நாங்கள் ஏமாற்றுவதையே புண்ணியமாகக் கருதுகின்றோம்" என்றார் டாக்டர்.

அதைக் கேட்டதும் நான் பெரிதும் மனவேதனை அடைந்தேன். என்றாலும், அமைதியுடன் இருந்தேன். டாக்டர் நல்லவர், என் சொந்த நண்பர். அவருக்கும் அவருடைய மனைவிக்கும் நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன். என்றாலும், அவருடைய வைத்திய தருமத்தைச் சகித்துக் கொள்ள நான் தயாராயில்லை.

"டாக்டர், இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம் என்பதைச் சொல்லுங்கள். என் மனைவி சாப்பிட விரும்பினாலன்றி, என் மனைவிக்கு ஆட்டிறைச்சி அல்லது மாட்டிறைச்சி கொடுப்பதை நான் அனுமதிக்கவே மாட்டேன். இதனால், அவள் இறந்துவிட நேர்ந்தாலும் சரிதான்" என்றேன்.

"உங்களுடைய தத்துவத்தை நீங்கள் தாராளமாக வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய மனைவி என்னிடம் சிகிச்சையில் இருக்கும் வரையில் நான் விரும்பும் எதையும் அவருக்குக் கொடுக்கும் உரிமை எனக்கு இருக்க வேண்டும். இது உங்களுக்குப் பிடிக்கவில்லையானால், அவரை அழைத்துக் கொண்டு போய்விடும்படி வருத்தத்துடன் நான்

கூற வேண்டியிருக்கும். என் வீட்டில் அவர் சாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது'' என்றார் டாக்டர்.

என் புதல்வர்களில் ஒருவனும் என்னுடன் இருந்தான் என்று நினைக்கிறேன். என் கருத்தை அவனும் முற்றும் ஆதரித்தான். தன் தாயாருக்கு மாட்டு மாமிச சூப் கொடுக்கக் கூடாது என்றான். பிறகு நான் கஸ்தூரி பாயிடமே இதைக் குறித்துப் பேசினேன். உண்மையில் அவள் அதிகப் பலவீனமாக இருந்தாள். இதுபற்றிக் கலந்து ஆலோசிக்கும் நிலையிலும் அவள் இல்லை. என்றாலும், அவளுடன் ஆலோசிக்க வேண்டியது என் வருந்தத்தக்க கடமை என்று எண்ணினேன். டாக்டரும் நானும் பேசிக் கொண்டிருந்த விவரத்தை அவளிடம் கூறினேன். அவள் தீர்மானமாகப் பதில் சொல்லி விட்டாள். ''நான் மாட்டு மாமிச சூப் சாப்பிட மாட்டேன். இவ்வுலகில் மானிடராய் பிறப்பதே அரிது. அப்படியிருக்க, இத்தகைய பாதகங்களினால் இவ்வுடலை அசுத்தப்படுத்திக் கொள்ளுவதைவிட உங்கள் மடியிலேயே இறந்து போய்விட நான் தயார்'' என்றாள்.

அவளுக்குச் சொல்லிப் பார்த்தேன். என்னைப் பின்பற்றித் தான் நடக்க வேண்டும் என்ற கட்டாயம் எதுவும் இல்லை என்றேன். மதுவையும் மாமிசத்தையும் மருந்தாகச் சாப்பிடுவதில் தவறு இருப்பதாக நினைக்காமல் நண்பர்களான ஹிந்துக்கள் சிலர் சாப்பிட்டிருக்கும் உதாரணங்களையும் அவளுக்கு எடுத்துக் கூறினேன். அவள் பிடிவாதமாக இருந்தாள். ''தயவு செய்து என்னை இங்கிருந்து அழைத்துச் சென்று விடுங்கள்'' என்றாள்.

ஆகவே, அந்த இடத்தை விட்ட உடனே புறப்பட்டுவிட முடிவு செய்தோம். மழை தூறிக் கொண்டிருந்தது. ஸ்டேஷனுக்குக் கொஞ்ச தூரம் போக வேண்டும். டர்பனிலிருந்து போனிக்ஸுக்கு ரெயிலில் போய், அங்கிருந்து எங்கள் குடியிருப்புக்கு இரண்டரை மைல் போக வேண்டும். நான் பெரிய அபாயகரமான காரியத்தையே மேற்கொண்டேன் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், கடவுளிடம் நம்பிக்கை வைத்து இவ்வேலையில் இறங்கினேன். முன்கூட்டிப் போனிக்ஸுக்கு ஓர் ஆள் அனுப்பினேன். ஓர் ஏணை, ஒரு புட்டி சூடான பால், ஒரு சுடு நீர் புட்டி ஆகியவைகளுடன் ஸ்டேஷனுக்கு வந்து எங்களைச் சந்திக்குமாறு வெஸ்ட்டுக்குச் சொல்லியனுப்பினேன். ஏணையில் வைத்துக் கஸ்தூரிபாயைத் தூக்கிச் செல்ல ஆறு ஆட்களும் வேண்டும் என்று அறிவித்தேன். அடுத்த ரெயிலில் கஸ்தூரிபாயை அழைத்துச் செல்ல ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக ஒரு ரிக்ஷாவை அமர்த்தினேன். அபாய நிலையிலிருந்த அவளை அதில் வைத்துக் கொண்டு புறப்பட்டேன்.

கஸ்தூரிபாயை உற்சாகப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக அவள் எனக்கு ஆறுதல் கூறினாள். ''எனக்கு ஒன்றும் நேர்ந்து விடாது. நீங்கள் கவலைப்படாதீர்கள்'' என்றாள்.

பல நாட்களாக ஆகாரமே இல்லாததனால் அவள் எலும்பும் தோலுமாக இருந்தாள். ஸ்டேஷன் பிளாட்பாரம் மிகப் பெரியது. ரிக்ஷாவைப் பிளாட்பாரத்திற்குள் கொண்டு போக முடியாததனால் கொஞ்ச தூரம் நடந்து தான் ரெயில் நிற்கும் இடத்திற்குச் செல்ல வேண்டும். ஆகையால், அவளை என் கைகளிலேயே தூக்கிக் கொண்டு போய் ரெயில் வண்டியில் ஏற்றினேன். போனிக்ஸ் ஸ்டேஷனிலிருந்து ஏணையில் வைத்துக் கொண்டு போனோம். அங்கே நீர்ச் சிகிச்சை செய்ததில் கொஞ்சம் கொஞ்சமாக பலம் பெற்று வந்தாள்.

## 38. குடும்ப சத்தியாக்கிரகம்

ரண சிகிச்சைக்குப் பிறகு குணமடைந்து வந்த கஸ்தூரிபாய் திரும்பவும் நோய் வாய்ப்பட்டாள். என்னுடைய சிகிச்சை முறைகளை அவள் எதிர்க்கவில்லையாயினும் அவற்றில் அவளுக்கு அவ்வளவாக நம்பிக்கையில்லை. ஆனால், வெளி வைத்திய உதவி வேண்டும் என்று அவள் கேட்கவே இல்லை. ஆகவே, என் வைத்திய முறைகள் எல்லாம் பயன்படாது போய்விட்டதால் உப்பையும், பருப்பு வகைகளையும் தள்ளும்படி அவளைக் கேட்டுக் கொண்டேன். தக்க ஆதாரங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி நான் எவ்வளவோ விவாதித்துப் பார்த்தும் இதற்கு அவள் சம்மதிக்க மறுத்து விட்டாள். கடைசியாக அவள் எனக்கு ஒரு சவாலும் விட்டாள். உப்பையும் பருப்பையும் விட்டு விடுமாறு எனக்கு யாராவது யோசனை கூறினாலும் அவற்றை என்னாலும் விட்டுவிட முடியாது என்றாள். இதைக் கேட்டு நான் வருந்தினேன். என்றாலும் அதே சமயத்தில் மகிழ்ச்சியும் அடைந்தேன். அவளிடம் எனக்குள்ள அன்பைப் பொழிவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது என்பதே மகிழ்ச்சிக்குக் காரணம். நான் அவளிடம் சொன்னேன்: ''நீ தவறாக நினைத்து விட்டாய்; நான் நோயுற்று இருந்து, இவற்றையும் மற்றவைகளையும் தவிர்த்து விடுமாறு வைத்தியர் யோசனை கூறினால், கொஞ்சமும் தயங்காமல் அப்படியே செய்வேன். அது போகட்டும். வைத்திய ஆலோசனை எதுவும் இல்லாமலேயே, நீ விட்டாலும் விடாது போனாலும், உப்பையும் பருப்புகளையும் ஓர் ஆண்டு நான் கைவிடுகிறேன்.''

இதைக் கேட்டதும் அவள் திடுக்கிட்டுப் போனாள். மிகுந்த துயரத்தோடு அவள் கூறியதாவது: ''தயவு செய்து என்னை மன்னித்துவிடுங்கள். உங்கள் இயல்பு தெரிந்திருந்தும் நான் இப்படி உங்களுக்குக் கோபம் மூட்டியிருக்கக் கூடாது. உப்பையும் பருப்பையும் சாப்பிடுவதில்லை என்று உறுதி கூறுகிறேன். கடவுள் ஆணை; உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன். இந்த விரதத்தை மட்டும் நீங்கள் விட்டுவிடுங்கள். இப்படி நீங்கள் என்னைத் தண்டிக்கக் கூடாது.''

''உப்பையும் பருப்பையும் சாப்பிடாமல் இருப்பது உனக்கு மிகவும் நல்லது. அவைகள் இல்லாமல் நீ நன்றாகவே இருப்பாய் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. என்னைப் பொறுத்தவரையில், நான் நிச்சயமாக எடுத்துக் கொண்டு விட்ட விரதத்தைக் கைவிட முடியாது. இது எனக்கும் நன்மையே செய்வது நிச்சயம். ஏனெனில், ஒரு கட்டுத் திட்டம், எது எக்காரணத்தினால் ஏற்பட்டதாயினும் மனிதருக்கு நல்லதே. ஆகையால் என்னைப் பற்றிக் கவலைப்படாதே. இது எனக்கு ஒரு சோதனை. அதோடு நமது தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு இது உனக்கு ஒரு தார்மிக ஆதரவாகவும் இருக்கும்'' என்றேன்.

எனவே, என்னை மாற்றுவதற்கில்லை என்று விட்டு விட்டாள். ''நீங்கள் மிகுந்த பிடிவாதக்காரர். யார் சொன்னாலும் கேட்க மாட்டீர்கள்'' என்று கூறிக் கண்ணீர் வடித்து ஆறுதல் அடைந்தாள்.

இந்தச் சம்பவத்தைச் சத்தியாக்கிரகத்திற்கு ஓர் உதாரணமாகவே கொள்ள விரும்புகிறேன். என்னுடைய வாழ்க்கையின் இனிமையான நினைவுகளில் இதுவும் ஒன்று.

இதற்குப் பிறகு கஸ்தூரி பாயின் தேக நிலை வெகு வேகமாய்க் குணமடைந்து வந்தது.

# 39. சத்தியாக்கிரகத்தின் உதயம்

''ஜூலு கலகம்'' சம்பந்தமான எனது கடமைகளை முடித்துத் திரும்பியதும் நண்பர்களைப் போனிக்ஸில் சந்தித்துவிட்டு ஜோகன்னஸ்பர்க் போய் சேர்ந்தேன். அங்கு நான் மிகவும் ஆழ்ந்த அருவருப்புடன் 1906-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 22-ம் தேதி அரசாங்கத்தின் விசேஷ கெஜட்டில் பிரசுரமாயிருந்த அவசரச் சட்டத்தின் நகலைப் படித்தேன். அது தென்னாப்பிரிக்காவிலிருக்கும் இந்தியர்களை முற்றிலும் நாசமாக்கும்படி இருந்தது. டிரான்ஸ்வாலில் குடியிருக்கும் உரிமை பெற்ற ஒவ்வோர் இந்திய ஆணும் பெண்ணும் எட்டு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளும், ஆசியாவாசிகளின் பதிவாளரிடத்தில் தத்தம் பெயரைப் பதிவு செய்து, அப்பதிவுக்கு அத்தாட்சியைப் பெற வேண்டும். பதிவு செய்து கொள்ள விண்ணப்பம் செய்வோர், தங்கள் பழைய அனுமதிச் சீட்டுகளைப் பதிவாளரிடத்தில் ஒப்படைத்து, விண்ணப்பங்களில் தங்கள் பெயர், முகவரி, சாதி, வயது முதலிய விவரங்களைக் குறிப்பிட வேண்டும். பதிவாளர் விண்ணப்பம் செய்வோருடைய உடம்பிலிருக்கும் முக்கியமான குறிகளை எழுதிக் கொள்வதுடன், அவர்களுடைய எல்லா விரல்களின் ரேகை முத்திரைகளையும் எடுக்க வேண்டும். குறிப்பிட்ட ஒரு தேதிக்கு முன் இவ்விதம் பதிவு செய்து கொள்ள விண்ணப்பம் தராத ஒவ்வோர் இந்தியரும் டிரான்ஸ்வாலில் குடியிருக்கும் சுதந்திரத்தை இழந்து விடுவார். விண்ணப்பம் செய்யத் தவறினால் அது சட்டப்படி ஒரு குற்றமாகக் கருதப்படும். விண்ணப்பிக்கத் தவறியவர்களுக்குக் கோர்ட்டார் விரும்பினால் அபராதம் விதிக்கலாம்; அல்லது அவர்களைச் சிறைக்கு அனுப்பலாம்; அல்லது நாடு கடத்தலாம்; பொதுச் சாலைகளில் நடந்து போய்க் கொண்டிருக்கும் எவரையும் தமது சர்டிபிகேட்டைக் காட்டுமாறு கேட்கலாம். போலீஸ் உத்தியோகஸ்தர்கள் சர்டிபிகேட்டுகளைச் சோதனை செய்வதற்காக தனிப்பட்ட எவர் வீட்டினுள்ளும் நுழையலாம். இம்மாதிரியான ஒரு சட்டத்தை சுதந்திரமான மனிதருக்கு விரோதமாக உலகில் எந்தப் பகுதியிலும் இயற்றி இருப்பதாக நான் கேள்விப்பட்டதே இல்லை.

அடுத்த நாள் முக்கியமான இந்தியர்களின் சிறு கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. அவர்களுக்கு அவசரச் சட்டத்தைச் சொல் சொல்லாகப் பிரித்து எடுத்துரைத்து விளக்கினேன். என்னைத் திடுக்கிடச் செய்தது போலவே அது அவர்களையும் திடுக்கிடச் செய்தது. அங்கே வந்திருந்தவர்கள் அனைவரும் நிலைமை எவ்வளவு மோசமானது என்பதை உணர்ந்தனர்; ஒரு பொதுக் கூட்டம் கூட்ட வேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

1906-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 21-ந் தேதி கூட்டம் நடந்தது. தீர்மானங்கள் எல்லாவற்றிலும் முக்கியமானது, பிரசித்தி பெற்ற அந்த நான்காவது தீர்மானமாகும். இந்தியர்களின் எதிர்ப்புக்கு விரோதமாய் அவசரச் சட்ட மசோதா சட்டமாக நிறைவேற்றப் பட்டால் இந்தியர்கள் அதற்குக் கீழ்ப்படிய மாட்டார்கள் என்றும், அப்படிக் கீழ்ப்படியாததால் வரும் எத்தகைய தண்டனையையும் ஏற்றுக் கொள்ளுவார்களென்றும் அத்தீர்மானம் கூறிற்று.

இயக்கத்திற்கு என்ன பெயர் கொடுப்பதென எங்களில் யாருக்கும் தெரியவில்லை. ஸ்ரீ மகன்லால் காந்தி, 'சதாக்கிரகம்' என்ற வார்த்தையைச் சொன்னார். சதாக்கிரகம் என்றால் நல்ல விஷயத்தில் உறுதி என்று பொருள். அவ்வார்த்தை எனக்குப் பிடித்தது. ஆயினும், நான் எதிர்பார்த்த முழுக் கருத்தையும் அது தெரிவிக்கவில்லை. எனவே, அதைச் 'சத்தியாக்கிரகம்' என்று திருத்தினேன். உண்மை (சத்தியம்) என்னும் வார்த்தையில் அன்பு என்னும் பொருள் மறைந்து நிற்கிறது. ஆக்ரஹ என்றால் உறுதி. உறுதி சக்தியை உண்டாக்குவதால் சக்தி என்ற அர்த்தத்துடன் விளங்குகிறது. இவ்விதம் இந்த இயக்கத்தை 'சத்தியாக்கிரகம்' என்று கூற ஆரம்பித்தேன். அதாவது உண்மையிலிருந்தும் அன்பு அல்லது அகிம்சையிலிருந்தும் பிறந்த சக்தி என்பது அதன் பொருள். 'பாஸிவ்ரெஸிஸ்டன்ஸ்'

என்னும் சொற்றொடரின் பிரயோகத்தை அதிலிருந்து விட்டுவிட்டேன்.

## 40. சிறைவாசம்

சில தலைவர்கள் வெளியில் இருக்கும் வரை இயக்கத்தை ஒடுக்க இயலாதென ஆசியவாசிகள் பகுதி அலுவலர்கள் கண்டு கொண்டார்கள். எனவே எங்களில் சிலரைக் கைது செய்தார்கள்.

நாங்கள் கைது செய்யப்பட்ட உடனே சிறைகளை நிரப்பி விடுவதென சமூகத்தினர் முடிவு செய்தனர்.

இவ்விதம் சுமார் இரு வாரங்கள் சிறையில் இருந்தோம். புதிதாக வந்தவர்கள் அரசாங் கத்துடன் சமரசத்திற்குப் பேச்சுக்கள் நடந்து கொண்டிருக்கின்றன என்று செய்தி கொண்டு வந்தார்கள். அச்சமாதானப் பேச்சின் முக்கிய அம்சங்களாவன: இந்தியர்கள் ஒரு சட்டத் தின் கீழ் அல்லாமல், தாங்களே பதிவு செய்து கொள்ள வேண்டும். இப்புதிய சர்டிபிகேட்டு களில் வேண்டிய விவரங்களை இந்திய சமூகத்துடன் கலந்து அரசாங்கம் நிருணயிக்க வேண்டும்; இந்தியர்களில் பெரும்பான்மையோர் தாங்களாகவே பதிவு செய்து கொண் டார்களானால், அரசாங்கத்தார் கறுப்புச் சட்டத்தை ரத்து செய்வதுடன் சுயேச்சையாகச் செய்யப்பட்ட பதிவுகளைச் சட்ட பூர்வமாக்கச் சர்க்கார் ஏற்பாடுகளைச் செய்யும்.

ஜெனரல் ஸ்மட்சைச் சந்திப்பதற்காக என்னைப் பிரிட்டோரியாவுக்கு அழைத்துச் சென்றனர். அவருடன் விவாதம் நடந்தது. நான் கூறிய மாறுதல்களுடன் ஒப்பந்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. கைதிகள் விடுதலையாயினர். நம் தேசவாதிகளுக்கு ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை விளக்குவதற்காகப் பல இடங்களுக்கும் சென்றேன்.

## 41. தாக்குதல்

கைரேகைகளைக் கொடுக்க இசைந்ததற்காக இரண்டு பட்டாணியர்கள் என் மீது கோபம் கொண்டார்கள். முதல் நாளன்று தலைவர்கள்தான் முதலில் பதிவுப் பத்திரங்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று ஏற்பாடாகியிருந்தது. நான் எனது காரியாலயத்திற்குச் சென்றபோது - சத்தியாக்கிரக சங்கக் காரியாலயமும் அது தான் - ஒரு பட்டாணியரான மீர் ஆலமும், அவரது தோழர்களும் கூட்டத்திற்கு வெளியில் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். மீர் ஆலமும் நீண்ட காலமாக எனது கட்சிக்காரர். அவரது எல்லா விஷயங் களை யொட்டியும் அவர் என்னுடைய ஆலோசனையையே நாடுவது வழக்கம். அவர் பூரணமாக ஆறு அடி உயரமுள்ளவர்; பருத்த, பலம் வாய்ந்த உடற்கட்டுள்ளவராகவும் இருந்தார். மீர் ஆலம் காரியாலயத்திற்கு உள்ளே இருப்பதற்குப் பதிலாக வெளியே நின்று கொண்டிருந்ததை நான் பார்த்தது அதுதான் முதல் தடவையாகும். அவர் கண்கள் என் கண்களைச் சந்தித்தனவெனினும், அவர் எனக்குச் சலாம் வைக்காமல் இருந்ததும் அது தான் முதல் தடவையாகும். நான் அவருக்கு சலாம் வைத்தேன். உடனே பதிலுக்கு அவரும் சலாம் வைத்தார். எனினும், அவரது வழக்கமான புன்முறுவல் அன்று அவரது முகத்தில் இல்லை. அவரது கோபமான கண்களை நான் கவனித்து, அந்த உண்மையை மனத்தில் குறித்துக் கொண்டேன். ஏதோ விபரீதம் நேரப்போகிறதென நான் நினைத்தேன். தலைவர் ஸ்ரீ யூசப் மியானும், மற்ற நண்பர்களும் வந்து சேர்ந்தனர். நாங்கள் ஆசியாக்காரர் அலுவல கத்திற்குப் புறப்பட்டோம். மீர் ஆலமும் அவர் தோழர்களும் எங்களைப் பின் தொடர்ந்தார் கள். ரிஜிஸ்டிரேஷன் காரியாலயத்துக்குச் செல்ல இன்னும் மூன்று நிமிஷங்களுக்கு மேல் எனக்கு வேண்டியிராது. அச்சமயத்தில் மீர் ஆலம் என்னிடம் வந்து, 'எங்கே போய்க்

கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார்.

''பத்து விரல்களின் ரேகைகளையும் வைத்து நான் பதிவுப் பத்திரம் ஒன்று எடுக்க உத்தேசித்திருக்கிறேன். நீங்கள் என்னுடன் வந்தால், இரண்டு கட்டை விரல்களை மாத்திரம் வைத்து உங்களுக்கு முதலில் ஒரு பத்திரம் எடுத்துத் தருகிறேன். பிறகு நான் என் கைரேகைகளை வைத்து எனக்கு ஒரு பத்திரம் எடுத்துக் கொள்ளுகிறேன்'' என்று பதில் அளித்தேன்.

கடைசி வாக்கியத்தை முடித்ததுதான் தாமதம், பின்புறத்திலிருந்து என் தலை மீது ஒரு கனமான தடியடி விழுந்தது. உடனே 'ஹே ராமா' என்ற வார்த்தைகளைக் கூறிக் கொண்டே நான் மூர்ச்சையடைந்து தரையில் விழுந்துவிட்டேன். அதன்பின் என்ன நடந்தது என்பதே எனக்குத் தெரியாது. ஆனால், மீர் ஆலமும் அவர் தோழர்களும் என்னை மேற்கொண்டு அடிமேல் அடி அடித்தார்கள். உதைத்தார்கள். அந்த அடிகளும் உதைகளும் என் மீது விழாமல் யூசப் மியானும் தம்பி நாயுடுவும் தடுத்தார்கள். அதன் விளைவாக அவர்களும் அடிபட நேர்ந்தது. அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த சில ஐரோப்பியர்கள் அந்தச் சந்தடியைக் கேட்டு, அந்த இடத்திற்கு ஓடி வந்தார்கள். அதைக் கண்டு மீர் ஆலமும் அவர் தோழர்களும் ஓட்டம் பிடித்தார்கள் என்றாலும், ஐரோப்பியர்கள் அவர்களைப் பிடித்து விட்டனர். இதன் மத்தியில் போலீசார் வந்து அவர்களைப் பிடித்துச் சென்றனர். என்னை, ஸ்ரீ ஜே.ஸி. ஜிப்சனின் சொந்த அலுவலகத்திற்குத் தூக்கிச் சென்றார்கள். எனக்கு மீண்டும் நினைவு வந்தபோது, ஸ்ரீ டோக் குனிந்து என்னைக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். ''உங்களுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?'' என்று அவர் என்னைக் கேட்டார்.

'எனக்கு எல்லாம் சரியாக இருக்கிறது. ஆனால், பற்களிலும், விலா எலும்புகளிலும் வலி இருக்கிறது. மீர் ஆலம் எங்கே இருக்கிறார்?'' என்றேன்.

'மற்றவர்களுடன் அவரும் கைது செய்யப்பட்டிருக்கிறார்'.

'அவர்களை விடுதலை செய்துவிட வேண்டும்.'

'அதெல்லாம் மிகவும் சரிதான். இப்போது நீங்கள் ஓர் அந்நியரின் அலுவலகத்தில் இருக்கிறீர்கள். உங்கள் உதட்டிலும் கன்னத்திலும் கடுமையான காயங்கள் ஏற்பட்டுள்ளன. போலீசார் உங்களை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லத் தயாராக இருக்கிறார்கள். ஆனால், நீங்கள் என் வீட்டிற்கு வந்தால் நானும் ஸ்ரீமதி டோக்கும் எங்களால் முடிந்த வரையில் உங்களைக் கவனித்து வருவோம்.''

'ஆமாம். தயவு செய்து என்னை உங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்லுங்கள். போலீஸாரின் ஆதரவுக்காக அவர்களுக்கு வந்தனம் அளிக்கிறேன். எனினும், உங்களுடன் செல்லவே நான் விரும்புகிறேன்' என்று அவர்களிடம் சொல்லுங்கள்.'

அப்போது அந்த இடத்திற்கு, ஆசியாக்காரர் பதிவு ரிஜிஸ்டிரார் ஸ்ரீ சாம்னியும் வந்து சேர்ந்தார். ஸ்மிட் தெருவில் உள்ள இந்த நல்ல மனிதரான பாதிரியாரின் (ஸ்ரீ டோக்) வீட்டிற்கு என்னை ஒரு வண்டியில் அழைத்துச் சென்றார்கள். டாக்டரும் அழைத்து வரப்பட்டார். இதன் மத்தியில் நான் சாம்னியிடம் கூறினேன்: 'நான் உங்கள் அலுவலகத்திற்கு வந்து பத்து விரல் முத்திரைகளை வைத்து, முதல் பதிவுப் பத்திரத்தை எடுத்துக் கொள்ள விரும்பினேன். ஆனால், கடவுளின் சித்தம் வேறு விதமாக இருந்தது. எனினும், அதன் சம்பந்தமான காகிதங்களைக் கொண்டு வரும்படியும் உடனே என்னைப் பதிவு செய்து கொள்ளும்படியும் நான் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். எனக்கு முன் யாரும் பதிவு செய்து கொள்ளும்படியும் விட்டுவிட மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

ஸ்ரீ சாம்னி கேட்டார்: 'அதற்கு அவசரம் என்ன? டாக்டர் சீக்கிரத்தில் இங்கே வருவார். நீங்கள் தயவு செய்து ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். எல்லாம் சரியாகி விடும். நான் மற்றவர்களுக்குப் பதிவுப் பத்திரங்களை வழங்குகிறேன். ஆனால், உங்களுடைய பெயரை பதிவேட்டின் முதல் இடத்தில் விட்டு வைக்கிறேன்.'

நான் பதில் கூறினேன்: 'அப்படியல்ல. நான் உயிருடன் இருந்தால், கடவுளுக்கு விருப்பமிருந்தால் முதல் பத்திரத்தை எடுத்துக் கொள்ளுவதாக நான் சத்தியம் செய்திருக்கிறேன். ஆகையால், இப்போதே இங்கே காகிதங்களைக் கொண்டு வரும்படி வற்புறுத்துகிறேன்.'

இதன்மீது ஸ்ரீ சாம்னி காகிதங்களைக் கொண்டு வருவதற்காகச் சென்றார். மீர் ஆலமும் மற்றவர்களும் என்னைத் தாக்கியதற்காக நான் அவர்களைக் குற்றவாளிகளாகக் கருதவில்லை. அது எப்படியாயினும், அவர்கள் மீது வழக்குத் தொடரப்படுவதை நான் விரும்பவில்லை. எனக்காக அவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும் நான் நம்புகிறேன். இவ்விதம் அட்டார்னி ஜெனரலுக்குத் தந்தி கொடுப்பதே நான் இரண்டாவதாகச் செய்ய வேண்டிய காரியமாக இருந்தது. ஆனால், ஜோகன்னஸ்பர்க்கில் உள்ள ஐரோப்பியர்கள் அட்டர்னி ஜெனரலுக்குக் கடுமையாக ஒரு கடிதம் எழுதினார்கள். குற்றவாளிகளுக்குத் தண்டனை கொடுக்கும் விஷயமாக காந்திஜியின் கருத்துக்கள் என்னவாயினும், அவற்றைத் தென்னாப்பிரிக்காவில் அமலுக்குக் கொண்டுவர முடியாது. அவ்விஷயமாக காந்தி எவ்வித நடவடிக்கைகளும் எடுக்காமல் இருக்கலாம். ஆனால், தாக்குதல் தனி நபருக்குச் சொந்தமான இடத்தில் நடக்கவில்லை; ஆனால், நெடுஞ்சாலையில் நடந்தது. எனவே, அது அரசாங்கச் சட்டத்துக்கு விரோதமான குற்றமாகும். பல ஆங்கிலேயர்கள் சாட்சியம் கூறவும் தயாராக இருக்கிறார்கள்.; எனவே, அவர்கள் மீது வழக்குத் தொடரப் பட வேண்டும்' என்றெல்லாம் ஐரோப்பியர்கள் தங்கள் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்கள். அதன் மீது அட்டர்னி ஜெனரல் அவர்களைக் கைது செய்தார். மீர் ஆலமும் அவர் தோழர்களில் ஒருவரும் மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை அடைந்தார்கள். என்னை மாத்திரம் சாட்சியாக அழைக்கவில்லை.

நான் காரியதரிசி மூலம் சமூகத்திற்குக் கீழ்க்கண்டவாறு ஓர் அறிக்கை விடுத்து, பிரசுரிப்பதற்காக அதைப் பத்திரிகைகளுக்கு அனுப்பினேன்.

நான் சௌகரியமாக இருக்கிறேன். ஸ்ரீ டோக் தம்பதிகள் சகோதரர் போலவும் சகோதரி போலவும் என்னைக் கவனித்து வருகிறார்கள். கூடிய சீக்கிரம் எனது கடமையை மேற்கொள்ளலாமென நம்புகிறேன்.

'இவ்வித நடவடிக்கையில் ஈடுபட்டவர்கள் தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறியவில்லை. நான் தவறு இழைப்பதாக அவர்கள் நினைத்தார்கள். அவர்களுக்குத் தெரிந்த ஒரே வழியில் அவர்கள் வஞ்சம் தீர்த்துக் கொண்டு விட்டார்கள். எனவே, அவர்களுக்கு எதிராக எவ்வித முறைகளையும் கைக்கொள்ள வேண்டாம் என்று நான் வேண்டிக் கொள்ளுகிறேன்.'

ஸ்ரீ சாம்னி காகிதங்களுடன் திரும்பி வந்தார். நான் எனது கைவிரல் முத்திரைகளை வைத்தேன். இருந்தாலும் வலியின்றி அவ்விதம் செய்ய முடியவில்லை. அப்போது ஸ்ரீ சாம்னியின் கண்களில் கண்ணீர் ததும்புவதை நான் பார்த்தேன். அவருக்கு எதிராகக் கசப்பான முறையில் நான் பல தடவை எழுதியுள்ளேன். எனினும், மனிதனின் உள்ளம் நிகழுகின்ற சம்பவங்களின் காரணமாக எவ்விதம் நெகிழ்ந்து விடுகிறது என்பதையே கண்ணீர் ததும்பிய அவரது கண்கள் காட்டின!

# 42. மீண்டும் சத்தியாக்கிரகம்

இந்தியர்கள் தாங்களாக வலுவில் முன் வந்து பதிவு செய்து கொண்டார்கள். எனவே, அரசாங்கம், கறுப்புச் சட்டத்தை ரத்துச் செய்து தங்கள் பங்கைச் செய்திருக்க வேண்டும். ஆனால், கறுப்புச் சட்டத்தை ரத்துச் செய்வதற்குப் பதிலாக ஜெனரல் ஸ்மட்ஸ் சட்டப் புத்தகத்தில் அச்சட்டத்தை நிலை நிறுத்தியதுடன், ஆசியாக்காரர்கள் பதிவு செய்து கொள் ளும் விஷயமாக மேற்கொண்டும் விதிகள் அடங்கிய ஒரு மசோதாவை சட்டசபையில் கொண்டு வந்தார். அம்மசோதாவை வாசித்தபோது நான் அதிர்ச்சியடைந்தேன்.

எனவே, சத்தியாக்கிரகிகளால் அரசாங்கத்திற்கு இறுதி எச்சரிக்கை ஒன்று அனுப்பப் பட்டது. அந்த அறிக்கை கூறியது இதுதான்: 'ஆசியாக்காரர் சட்டம் ரத்து செய்யப்படாவிட் டால் இந்தியர்கள் சேகரித்துள்ள பதிவுச் சட்டங்கள் எரிக்கப்படும். இந்தியர்கள் பணிவுட னும் ஆனால், உறுதியுடனும் பலாப்பலன்களை அனுபவிக்கத் தயாராக இருக்கிறார்கள்.''

பதிவுப் பத்திரங்களை எரிக்கும் சடங்கை பகிரங்கமாக நடத்துவதற்காக ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. கூட்ட நடவடிக்கைகள் ஆரம்பமாகும் சமயத்தில் அரசாங்கத்திடமிருந்து வந்த தந்தி ஒன்றை எடுத்துக் கொண்டு ஒரு தொண்டர் சைக்கிளில் வந்தார். இந்தியர் சமூகத்தின் தீர்மானத்தைக் குறித்துத் தாங்கள் வருந்துவதாகவும், தங்கள் நடவடிக்கை முறையை மாற்றிக் கொள்ளுவது இயலாத காரியம் என்றும் அத்தந்தியில் குறிப்பிடப்பட்டி ருந்தது. தந்தியை கூட்டத்தினருக்கு வாசித்துக் காட்டியபோது, பத்திரங்களை எரிக்கும் மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பம் தங்கள் கையில் இருந்து நழுவி விடாததைக் குறித்து மகிழ்ச்சி யடைவதைப் போல் எல்லோரும் சந்தோச ஆரவாரத்துடன் அதைக் கேட்டனர்.

இந்தக் கூட்டத்திற்கு மீர் ஆலமும் வந்திருந்தார். என்னைத் தாக்கியது தவறு என்று அவர் அறிவித்ததுடன், அவர் தாமாக வழுவில் பதிவுப் பத்திரம் எடுத்துக் கொள்ளாத தால், எரிப்பதற்காக அவரது அசல் பத்திரத்தையும் கொடுத்தார். இதைக் கண்டு கூட்டத்தி னர் மிகுந்த ஆனந்தம் அடைந்தனர். நான் மகிழ்ச்சியுடன் அவரது கையைப் பிடித்தக் கொண்டு, அவருக்கு விரோதமாக என் மனத்தில் ஒரு காலத்திலும் நான் கோபம் கொள்ள வில்லை என்று அவருக்கு மீண்டும் உறுதி கூறினேன்.

எரிப்பதற்காக 2000 பத்திரங்களுக்கு மேல் கமிட்டிக்கு ஏற்கனவே கிடைத்து விட் டன. ஸ்ரீ யூசப் மியான் தீ மூட்டினார். அவற்றையெல்லாம் மண்ணெண்ணையில் நனைத்து நெருப்பில் எறிந்தனர். அப்பொழுது கூட்டத்தில் இருந்த எல்லோரும் எழுந்து, பத்திரங்க ளெல்லாம் எரிந்தபோது இடைவிடாது சந்தோஷ ஆரவாரம் செய்தனர். அவர்களுடைய ஆரவாரத்தின் எதிரொலிகளால் அந்த இடம் முழுதும் அதிர்ந்து கொண்டிருந்தது. தங்களு டைய பத்திரங்களைக் கொடுக்காமல் வைத்துக் கொண்டிருந்த சிலர் அந்த பத்திரங்களை யெல்லாம் சேர்த்து மேடைக்கு கொண்டு வந்தனர். அவைகளும் சுவாலையில் எரியப்பட் டன.

அக்காட்சியெல்லாம் கூட்டத்திற்கு வந்திருந்த ஆங்கிலப் பத்திரிகைகளின் பிரதிநிதி களை வெகுவாக கவர்ந்தன. அவர்கள் தங்களுடைய பத்திரிக்கைகளில் அக்கூட்டத்தைப் பற்றியே விரிவான வர்ணனைகளை வெளியிட்டனர்.

கருப்புச் சட்டம் நிறைவேறிய அதே வருஷத்தில் டிரான்ஸ்வால் குடியேற்றக் கட்டுப் பாடு மசோதா என்ற மற்றொரு மசோதாவை ஜெனரல் ஸ்மட்ஸ் சட்ட சபையில் கொண்டு வந்து நிறைவேறும்படி செய்தார். இந்தச் சட்டம், டிரான்ஸ்வாலுக்குள் புதிதாகப் பிரவேசிக் கும் கலியாணமாகாத இந்தியரை மறைமுகமாகத் தடுப்பதாக இருந்தது.

இந்தியர்களுடைய உரிமைகளில் இவ்விதம் மேலும் தலையிடுவதைத் தடுக்க வேண்

டியது இந்தியர்களுக்கு முற்றிலும் அத்தியாவசியமாகிறது. எனவே பல சத்தியாக்கிரகிகள் வேண்டுமென்றே டிரான்ஸ்வாலுக்குள் பிரவேசித்து, சிறைப்படுத்தப் பட்டார்கள். நானும் மீண்டும் கைது செய்யப்பட்டேன்.

சத்தியாக்கிரகிகளுக்கும் அரசாங்கத்திற்கும் இடையே சமரசம் செய்து வைப்பதற்காக 1912 அக்டோபரில் கோகலே தென்னாப்பிரிக்காவுக்கு வந்தார். கருப்புச் சட்டம் ஒரு வருஷக் காலத்தில் ரத்துச் செய்யப்படும் என்றும், 3 பவுன் வரியும் அகற்றப்படும் என்றும் ஜெனரல் போத்தா வாக்குறுதி அளித்ததாக கோகலே கூறினார். ஆனால், பின்னர் அவ்வி தம் செய்யப்படவில்லை.

வாக்குறுதி மீறப்பட்டதைக் குறித்து நான் கோகலேக்கு எழுதினேன். வரப்போகும் இயக்கத்திற்கான ஏற்பாடுகளையும் செய்ய முற்பட்டேன்.

இதுவரையில் சிறைத் தண்டனையை நாட வேண்டாம் என்று நாங்கள் பெண்களைத் தடுத்து வந்தோம். ஆனால் இச்சமயத்தில் தென்னாப்பிரிக்க அரசாங்கத்தினால் ஒரு தீர்ப்பு அளிக்கப்பட்டது. அதாவது கிறிஸ்துவச் சடங்குகளுக்கு இணங்க நடைபெறாத கலியாணப் பதிவு ரிஜிஸ்டிராரால் பதிவு செய்யப்படாத திருமணங்கள் யாவும் செல்லுபடியாகா என்பதே ஆகும். இவ்விதமாக இந்து, முஸ்லிம், ஸொரோஸ்டிரியச் சடங்குகளின் படி நடைபெற்ற கல்யாணங்கள் யாவும் சட்டத்திற்கு விரோதமானவை என்று பேனா முனையால் முடிவு செய்யப்பட்டு விட்டன. இவ்விதமாக சம்மந்தப்பட்ட மனைவிமார், வைப்பாட்டிகளின் நிலைக்குத் தாழ்த்தப்பட்டனர். அவர்களுடைய குழந்தைகளும் சொத்துகளின் வாரிசு பாத்தியத்தை இழந்தனர். இது ஆடவர்களைப் போல் பெண்களுக்கும் சகிக்க முடியாத ஒரு நிலைமையாகியது.

நமது பெண் குலத்திற்கு இழைக்கப்பட்ட இந்த அவமதிப்பிற்கு முன் பொறுமை காட்டுவது என்பது முடியாத காரியம். போராடுபவர்களின் தொகை என்னவாயினும் உறுதியுடன் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்வதென்று தீர்மானித்தோம். இப்போது போராட்டத்தில் சேருவதிலிருந்து பெண்களை தடுப்பதில்லை என்பது மாத்திரமல்ல; ஆடவர்களுக்குச் சமமாகப் போராட்டத்தில் கலந்து கொள்ளும்படி பெண்களை அழைப்பதென்றும் நாங்கள் தீர்மானித்தோம். பெண்கள் சிறைப்பட்டது, நியூ காசிலுக்கு அருகிலுள்ள சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் விஷயத்தில் ஒரு மந்திர சக்தியைப் போல் வேலை செய்தது. அவர்கள் தங்கள் கருவிகளைக் கீழே வைத்து விட்டு, கோஷ்டி கோஷ்டியாக நகருக்குள் பிரவேசித்தார்கள். இச் செய்தி எனக்கு கிடைத்த உடனே நான் போனிக்ஸிலிருந்து நியூ காசிலுக்குப் புறப்பட்டேன்.

தொழிலாளர்களை, பத்துக் கணக்கில் அல்ல நூற்றுக் கணக்கிலேயே எண்ண வேண்டியிருந்தது. அவர்களின் தொகை எளிதில் ஆயிரக்கணக்காக பெருகி விடலாம். பெருகி வரும் இந்தக் கூட்டத்தினருக்கு நான் இருக்க இடமும், உணவும் எப்படி அளிப்பது? ஆடவர்களின் பெரும் கூட்டம் தொடர்ந்து பெரிதாகிக் கொண்டிருந்தது. வேலையில்லாத அவர்களை ஒரே இடத்தில் வைத்துப் பராமரிப்பது அசாத்தியமான காரியம் அல்லவாயினும் அது ஆபத்தானது. எனது இந்தப் பிரச்சினைக்கு பரிகாரம் என்ன என்பது பற்றி ஆலோசித்தேன். இந்த 'இராணுவ'த்தைத நான் டிரான்ஸ்வாலுக்கு கொண்டு சென்று அங்கே அவர்கள் பத்திரமாக சிறையில் அடைபடும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். இந்த 'இராணு'வத்தின் தொகை சுமார் 5000 பேர்களாகும்.

## 43. சத்தியாக்கிரகத்தின் வெற்றி

நிரபராதிகளான ஆயிரக்கணக்கான மனிதர்களைச் சிறையில் வைத்திருக்கத் தென்னாப்பிரிக்க யூனியன் அரசாங்கத்துக்கு அதிகாரம் இல்லை. வைஸ்ராய் அதை சகித்துக் கொண்டு இருக்க மாட்டார். எனவே, ஜெனரல் ஸ்மட்ஸ் என்ன செய்யப் போகிறார் என்பதைக் காண உலகம் முழுவதும் காத்துக் கொண்டிருந்தது. அத்தகைய நிலைமையில் உள்ள எல்லா அரசாங்கங்களும் பொதுவாக என்ன செய்யுமோ அதையே யூனியன் அரசாங்கமும் இப்போது செய்தது. ஒரு கமிஷனை நியமிப்பதன் மூலம் அத்தகைய தரும சங்கடமான நிலையிலிருந்து அரசாங்கங்கள் தப்பித்துக் கொள்ளுகின்றன. அத்தகைய ஒரு கமிஷனில் சிபாரிசுகள் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்படுவதே பொதுவான ஒரு வழக்கமாகும். எனவே, சிபாரிசுகளை நிறைவேற்றுவதாகக் கூறிக்கொண்டு, அரசாங்கங்கள் முதலில் மறுத்துவிட்ட நீதியைப் பின்னர் வழங்குகின்றன. ஜெனரல் ஸ்மட்ஸூம் மூன்று அங்கத்தினர்கள் அடங்கிய ஒரு கமிஷனை நியமித்தார்.

கமிஷனின் அலுவல்கள் சம்பந்தமாக நான் ஜெனரல் ஸ்மட்ஸூடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டு, ஓர் ஒப்பந்தத்திற்கு வந்தேன். கமிஷன் தனது அறிக்கையில், இந்திய சமூகத்தின் கோரிக்கைகளை அங்கீகரிக்கும்படி சிபாரிசு செய்தது. அறிக்கை வெளியான பின் சிறிது காலத்திற்குள் அரசாங்கம் யூனியனின் அதிகாரப்பூர்வமான கெஜட்டில் இந்தியர்களின் கஷ்ட நிவாரண மசோதாவைப் பிரசுரித்திருந்தது. அம்மசோதா 3 பவுன் வரியைச் ரத்துச் செய்தது; இந்தியாவில் சட்ட பூர்வமானவை என்று கருதப்படும் எல்லாத் திருமணங்களும் யூனியனிலும் சட்டப் பூர்வமானவை என்று அங்கீகரிக்கப் பெற்றன; நபரின் கட்டை விரல் முத்திரை தாங்கிய குடியேற்றப் பத்திரமே யூனியனில் பிரவேசிக்கும் உரிமைக்கான போதிய சாட்சியமாகும் என்றும் நிர்ணயிக்கப் பெற்றது.

இவ்விதமாக, எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு மகத்தான சத்தியாக்கிரகப் போராட்டம் முடிவடைந்தது. அப்போது தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு அமைதியான வாழ்வு ஏற்பட்டது போல் தோன்றியது. 1914 ஜூலை 18-ல் நான் இந்தியாவிற்குத் திரும்பும் நோக்கத்துடன் இங்கிலாந்திற்குப் புறப்பட்டேன். தென்னாப்பிரிக்காவை விட்டுப் பிரிவது எனக்குக் கஷ்டமாக இருந்தது. அங்கே நான் எனது வாழ்க்கையில் இருபத்தொன்று ஆண்டுகளைச் கழித்தேன். இனிமையானவையும் கசப்பானவையுமான மானிடர்க்கு உரிய அனுபவங்களில் முழுப் பங்கு எடுத்துக் கொண்டேன். வாழ்க்கையில் நான் செய்ய வேண்டிய அலுவல்கள் என்னென்ன என்பதை அங்கே தான் உணர்ந்து கொண்டேன்.

## 44. பூனாவில்

நீண்ட நாள் வெளிநாடுகளில் இருந்துவிட்டுத் தாய்நாடு திரும்புவதில் மகிழ்ச்சியடைந்தேன்.

கோகலேயும், இந்திய ஊழியர் சங்கத்தின் மற்ற அங்கத்தினர்களும் என்னைத் தங்கள் அன்பு வெள்ளத்தில் மூழ்கடித்து விட்டனர். என்னைச் சந்திப்பதற்காக அவர்களையெல்லாம் கோகலே அங்கே வரவழைத்திருந்தார் என்று தான் எனக்கு ஞாபகம். எல்லா விஷயங்களைப் பற்றியும் அவர்களுடன் நான் மனம் விட்டுத் தாராளமாக விவாதித்தேன்.

ஓர் ஆசிரமத்தை அமைத்து, அதில் என் போனிக்ஸ் குடும்பத்துடன் வாழ விரும்பினேன். குஜராத்தில் எங்காவது ஆசிரமத்தை அமைப்பதே உத்தேசம். நான் குஜராத்தியனாகையால், குஜராத்துக்குச் சேவை செய்து அதன் மூலம் நாட்டுக்குச் சேவை செய்ய எண்ணி

னேன். இந்த என் உத்தேசம் கோகலேக்குப் பிடித்திருந்தது. அவர் கூறியதாவது: ''நீங்கள் நிச்சயம் அப்படியே செய்ய வேண்டும். அங்கத்தினர்களுடன் நீங்கள் பேசியதன் பலன் எதுவாக இருந்தாலும் சரி, உங்கள் ஆசிரமத்தை என் சொந்த ஆசிரமமாகவே கருதுவேன். ஆசிரமத்தின் செலவுக்கு நீங்கள் என்னையே எதிர்பார்க்க வேண்டும்.''

இதைக் கேட்டு நான் அளவு கடந்த ஆனந்தமடைந்தேன். நிதி திரட்டும் பொறுப்பிலிருந்து விடுபடுவது ஓர் ஆனந்தமே.

## 45. ஆசிரமத்தின் ஆரம்பம்

அகமதாபாத்திலுள்ள கோசரப் என்னுமிடத்தில் 1915 மே 25ஆம் தேதி சத்தியாக்கிரக ஆசிரமம் ஆரம்பமாயிற்று.

நாங்கள் மொத்தம் ஆண்களும் பெண்களுமாக இருபத்தைந்து பேர்.

எல்லோரும் பொதுவான ஒரே சமையலுடன் ஒரே குடும்பமாக வாழ முயன்று வந்தோம்.

ஆசிரமம் ஆரம்பமாகிச் சில மாதங்களே ஆயின.

அதற்குள் நான் எதிர்பார்த்தே இராத வகையில் நாங்கள் சோதனைக்கு ஆளானோம். அமிர்தலால் தக்கரிடமிருந்து கீழ்வருமாறு ஒரு கடிதம் வந்தது: ''அடக்கமும் நேர்மையும் உள்ள ஒரு தீண்டாதாரின் குடும்பம் உங்கள் ஆசிரமத்தில் சேர்ந்து கொள்ள விரும்புகிறது. அவர்களை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா?''

விதிகளுக்கு உட்பட்டு நடந்து கொள்ள அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். நாங்களும் அவர்களை ஏற்றுக் கொண்டோம்.

ஆனால், அவர்களைச் சேர்த்துக் கொண்டது, ஆசிரமத்திற்கு உதவி செய்து வந்த நண்பர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கி விட்டது. கிணற்றை உபயோகிப்பது சம்பந்தமாக முதலில் கஷ்டம் ஏற்பட்டது. அந்தக் கிணற்றை அந்தப் பங்களாவின் சொந்தக்காரரும் உபயோகித்து வந்தார். அதிலிருந்து தண்ணீர் இறைப்பதற்காக நியமிக்கப்பட்டிருந்தவர், எங்கள் வாளியிலிருந்து தண்ணீர் துளிகள் விழுவதால் தமக்குத் தீட்டுப்பட்டுப் போகும் என்று கூறி ஆட்சேபித்தார். ஆகவே, எங்களைத் திட்டினார்; தூதாபாயைத் தொந்தரவும் செய்தார். அவர் திட்டுவதையெல்லாம் சகித்துக் கொண்டு என்ன வந்தாலும் சரியென்று கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்கும்படி எல்லோரிடமும் கூறினேன். தாம் திட்டினாலும் நாங்கள் திருப்பித் திட்டுவதில்லை என்பதைக் கண்டதும் அவருக்கே வெட்கமாகப் போய் விட்டது. எங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதை விட்டு விட்டார்.

பண உதவியையெல்லாம் நிறுத்திவிட்டதோடு எங்களைச் சமூக பகிஷ்காரம் செய்வதற்கும் யோசிக்கிறார்கள் என்றும் வதந்திகள் கிளம்பின. இவைகளினால் கலக்கமடைந்தோம். நாம் பகிஷ்காரம் செய்யப்பட்டுச் சாதாரண வசதிகளெல்லாம் மறுக்கப்பட்டாலும், அகமதாபாத்தைவிட்டு நாம் போய்விடக் கூடாது, என்று என் சகாக்களுக்குக் கூறினேன். வெளியேறி விடுவதைவிடத் தீண்டாதாரின் இடத்திலேயே போய் வசித்து, உடலை வருத்தி வேலை செய்வதால் கிடைப்பதைக் கொண்டு வாழ்வதே மேல் என்றும் கூறினேன்.

''நம்மிடம் பணம்இல்லை. அடுத்த மாதச் செலவுக்கு நம்மிடம் ஒன்றும் கிடையாது'' என்று ஒரு நாள் மகன்லால் காந்தி எனக்கு அறிவித்துவிட்டார். நிலைமை அத்தகைய

நெருக்கடியான கட்டத்திற்கு வந்து விட்டது. ''அப்படியானால், தீண்டாதார் வசிக்கும் இடத்திற்கே நாம் போய் விடுவோம்' என்று நான் அமைதியோடு பதில் சொன்னேன்.

இது போன்ற சோதனை எனக்கு ஏற்பட்டது இது முதல் தடவை அல்ல..இத்தகைய நிலைமைகளிலெல்லாம் கடைசி நேரத்தில் கடவுளே எனக்கு உதவியை அனுப்பியிருக்கி றார். எங்களுக்கு ஏற்பட்டுவிட்ட பணக் கஷ்டத்தைக் குறித்து மகன்லால் எனக்கு எச்ச ரிக்கை செய்த பிறகு ஒரு நாள் காலை, குழந்தைகளில் ஒன்று ஓடி வந்து, ஒரு சேத் வெளியில் மோட்டாரில் இருக்கிறார் என்றும், என்னைப் பார்க்க விரும்புகிறார் என்றும் கூறியது. அவரைப் பார்க்க வெளியே போனேன். 'ஆசிரமத்திற்குக் கொஞ்சம் உதவி செய்ய விரும்புகிறேன். அதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்களா?'' என்று அவர் என்னைக் கேட்டார்.

'நிச்சயமாக ஏற்றுக் கொள்ளுவோம். எங்கள் கையில் இருந்ததெல்லாம் செலவழிந்து போய்விட்ட நிலையில் நாங்கள் இருக்கிறோம் என்பதையும் உங்களிடம் கூறுகிறேன்'' என்றேன்.

''நாளை இதே நேரத்தில் இங்கு வருகிறேன். நீங்கள் இருப்பீர்களல்லவா?'' என்றார்.

''ஆம்'' என்று நான் சொன்னதும் அவர் போய்விட்டார்.

அடுத்த நாள், சரியாக அந்த நேரத்தில் நாங்கள் இருந்த இடத்திற்கு அருகில் மோட் டார் வந்து நின்றது. வந்ததற்கு அறிகுறியாகச் சப்தம் கொடுக்கப்பட்டது. குழந்தைகளும் ஓடி வந்து சமாசாரத்தைச் சொன்னார்கள். சேத் உள்ளே வரவில்லை. நானே அவரைப் பார்க்கப் போனேன். அவர் என் கையில் ரூ. 13,000க்கு நோட்டுக்களைக் கொடுத்துவிடட் டுப் போய்விட்டார்.

இந்த உதவியை நான் எதிர்பார்க்கவே இல்லை. எப்படிப்பட்ட புதிய வகையில் உதவி! அந்த கனவான் இதற்கு முன்னால் ஆசிரமத்திற்கு வந்ததே இல்லை. ஒரே ஒரு முறைதான் அவரை நான் சந்தித்திருக்கிறேன் என்று எனக்கு ஞாபகம். உள்ளே வரவும் இல்லை; விசாரிக்கவும் இல்லை! உதவியைச் செய்துவிட்டுப் போய்விட்டார். எனக்கு இது ஒப்பற்றதோர் அனுபவம்.

இனி ஓர் ஆண்டுக்குக் கவலை இல்லை என்று அப்பொழுது உணர்ந்தோம்.

## 46. அவுரிச் சாகுபடி அநீதி

சம்பாரண் குடியானவர் ஒவ்வொருவரும், தாம் சாகுபடி செய்யும் நிலத்தின் இருப தில் மூன்று பாகத்தில் தமது நிலச்சுவான் தாருக்காக அவுரியைக் கட்டாயம் பயிர் செய்தாக வேண்டும் என்று சட்டம் இருந்தது; இதற்குத் 'தீன் கதியா' முறை என்று பெயர். இருபது 'கதியா'க்கள் கொண்டது ஒரு ஏக்கர். அதில் மூன்று 'கதியா'வில் அவுரிச் சாகுபடி செய்ய வேண்டும் என்று இருந்ததால் அம்முறைக்குத் 'தீன் கதியா' என்று பெயர்.

இத்துன்பங்களை அனுபவித்து வந்த விவசாயிகளில் ஒருவர் ராஜ்குமார் சுக்லா, தம்மைப் போல் மற்றும் ஆயிரக்கணக்கான விவசாயிகள் அனுபவித்து வரும் அநீதியை எப்படியும் போக்க வேண்டும் என்ற ஆர்வம் மிகுந்தவர் அவர்.

ஆகவே, 1917-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் நாங்கள் கல்கத்தாவிலிருந்து சம்பாரனுக் குப் புறப்பட்டோம்.

